# நடைமுறைத்தமிழ் வழிகாட்டி: அகர வரிசை



விடுதலைப்புலிகளின் தமிழ் வளர்ச்சிக்கழகம்

நடைமுறைத் தமிழ் வழிகாட்டி:

# அகரமுதலி




விடுதலைப் புலிகளின்
தமிழ் வளர்ச்சிக் கழகம்,

# முகவுரை

விடுதலைப் புலிகளின் தமிழ் வளர்ச்சிக் கழகம் சென்ற ஆண்டு 'மக்கட் பெயர் அகர வரிசை' நூலை வெளியிட்டுத் தூய தமிழ்ப் பெயர்களை எம் மக்கள் இட்டு வழங்க வழி காட்டியது. நாள்தோறும் எம்மிடையே பேச்சிலும் எழுத்திலும் தமிழ்ச் சொற்களைக் கையாளத் தூண்டி ஊக்குவிக்க 'நடைமுறைத் தமிழ் வழிகாட்டி' நூல், இன்று வெளியாகின்றது.

வடசொற்களும் திசைச்சொற்களுமாகக் காலந்தோறும் தமிழிடையே பிற சொற்கள் எண்ணுக்கணக்கற்று வந்து கலப்பதாலே, தமிழின் தூய்மையும் தனித்தன்மையும் பாழ் பட்டு வருவதனைத் தமிழராகிய நாம் உணர்ந்து கொள்ளாதிருக்கின்றோம். இந்நிலை தொடருமாயின் 'மெல்லத் தமிழினிச் சாகும்' என்பது திண்ணம்.

சங்ககாலத்திலே தமிழிலே 2 நூற்றுக்கூறே வடசொல்லாயும் திசைச்சொல்லாயுமிருந்து, பின்னர் சங்கமருவிய காலத்தில் 8 நூற்றுக் கூறாகிப் படிப்படியாய் வளர்ந்து, இன்று 70--80 நூற்றுக்கூறு தமிழ் மொழி அல்லாத பிறசொற்களாய் இருந்து வருவது, பெருங்கவலைக்குரியதாகும். எம் மக்கள், சோம்பலாலும் பிற மொழிச் சொற்களைக் கையாள்வதனாலே தாம் நாகரிகர், அறிவாளர் என்று காட்ட முனையும் போலி விருப்பினாலுமே தமிழுக்கு இந்நிலை ஏற்பட்டது.

உலகெங்கும் அறிவியல் ஆல்போலத் தழைத்து அறுகுபோல வேரோடி வருகின்றது. அறிவியலில் வளர்ச்சி பெற்றுள்ள எந்த நாடும் தனது தாய்மொழி வாயிலாகவே இவ்வளர்ச்சியைப் பெற்றுள்ளது. பிறமொழிச் சொற்களைத் தவிர்த்து இயன்ற அளவு தமது மொழிச் சொற்களையே அந்நாட்டவர் கையாண்டு வருகின்றனர். தமிழரான நாமோ அறிவியல் சார்ந்த தூய தமிழ்ச் சொற்களைக் கையாள உளங்

கொள்ளாது, வடசொற்களையும் ஒலிமாற்றம் செய்த பிறமொழிச் சொற்களையும் கையாண்டு வருகின்றோம். இதனாலும் தமிழின் தூய்மை கெடுவதோடு, அறிவியலுக்குக் கையாளத் தகுதி வாய்ந்த பழந்தமிழ்ச் சொற்களை இழக்கவும் நேரிடுகின்றது. தமிழின் சொற்களஞ்சியம் குறைய அதனிடத்திலே பிறமொழிச் சொற்களே ஏறிக் கொடுங்கோலோச்சுவதும் தவிர்க்கப்படவேண்டியதே. அன்றுதான் நாம் அறிவியலிலும் வளர்ந்து தலைநிமிர்ந்து நிற்கலாம்.

தமிழீழத்திலே நாம் கையாளும் கலைச் சொற்களே தமிழ்கூறும் நல்லுலகெங்கணும் எதிர்காலத்திலே பயன்படத்தக்கவாறு, விடுதலைப் புலிகளின் தமிழ் வளர்ச்சிக் கழகம், அறிவியற் கலைச்சொல் அகரவரிசையை அமைக்கவும், அம்முயற்சியில் அவ்வத்துறை அறிஞர்களைத் தமிழறிஞரோடு இணைத்துச் செயற்படுத்தவும் உறுதிகொண்டுள்ளது. இந்தத் திட்டம் செயல்வடிவம் பெற்று மிக விரைவிலே 'தமிழ்க் கலைச்சொல் வரிசை' நூலும் அடுத்து வெளிவரும்.

தமிழர்தம் விடுதலைப் போராட்டத்திலே தமிழீழம் முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் அமைந்துள்ளதுபோலத் தமிழ்மொழிக் காப்பிலும் தூய தமிழ்ச்சொல் அறிமுகத்திலும் ஈடுபட்டிருப்பதன் வெளிப்பாடே, இன்று வெளியாகும் 'நடைமுறைத் தமிழ் வழிகாட்டி' என்ற இந்நூல். இதனைப் பயன்செய்து நடைமுறைப்படுத்தத் தமிழீழ மக்கள் முன்வருவர் என்ற தளராத நம்பிக்கையுடன், இந்நூலை அவர்களுக்குப் படையலாக்குகின்றோம்.

இடப்புறம் தடித்த எழுத்துக்களில் உள்ள பிறமொழிச் சொற்களுக்கு எதிரே வலப்புறத்தில் மெல்லிய எழுத்துக்களில் தூயதமிழ்ச் சொற்கள் வழங்கப்பட்டுள்ளன.

**விடுதலைப் புலிகளின்**
**தமிழ் வளர்ச்சிக் கழகம்.**

## அ

| சொல் | பொருள் |
|---|---|
| அக்கிரமம் | முறைகேடு, ஒழுங்கின்மை |
| அக்கினி | நெருப்பு, தீ, அனல், தழல் |
| அகம்பாவம் / அகங்காரம் | செருக்கு, தற்பெருமை |
| அகதி | ஏதிலி |
| அகந்தை | செருக்கு, இறுமாப்பு |
| அகராதி | அகரமுதலி, அகரவரிசை |
| அகாலம் | தகாக்காலம், அல்காலம், இயற்கையல்லாத |
| அகிம்சை | துன்புறுத்தாமை, இன்னாசெய்யாமை |
| அகில | அனைத்து, முழு |
| அகிலம் | உலகம், வையகம் |
| அகோரம் * | கொடுமை |
| அங்கம் | உறுப்பு, பகுதி |
| அங்குலம் | விரற்கிடை, இறை, விரலிறை |
| அசம்பாவிதம் | முரணிகழ்வு |
| அசரீரி | விண்ணொலி |
| அசாத்தியம் | இயலாமை, இயலாதது |
| அஞ்சலி | வணக்கம் |
| அஞ்ஞானம் | அறியாமை, அறிவின்மை |
| அஞ்ஞானி | அறிவிலி |

---

* கோரம் என்னும் சொல்லின் பொருளிலேயே அகோரம் என்னும் சொல், தமிழ்ப் பேச்சு வழக்கிலே பயன்படுத்தப்படுகின்றது.

அத்தம் / அஸ்தம் – கை

அத்தமனம் / அஸ்தமனம் – மறைவு, சாவு

அத்தி / அஸ்தி – என்பு, எலும்பு

அத்தியாயம் – இயல், நூற்பிரிவு

அத்திரம் / அஸ்திரம் – கணை, அம்பு

அதம் – அழிப்பு

அதமம் – கீழ்மை

அதரம் – இதழ்

அதிகம் – மிகுதி, பெருக்கம்

அதிகாரம் – இயல், ஆட்சி, ஆளுமை, ஆட்சியுரிமை, செயலுரிமை

அதிகாரி – மேலாளர்

அதிகாலை – விடியல், வைகறை

அதிசயம் – வியப்பு

அதிட்டம் / அதிஸ்டம் – நல்வாய்ப்பு, நல்லூழ், ஆகூழ்

அதிதி – விருந்தினர்

அதிபதி – முதல்வன், தலைவன்

அதீதம் – மிகை

அந்தரங்கம் – மறைவடக்கம்

அந்தரம் – பரபரப்பு

அந்தி – மாலை

அந்நியம் – வேறுபாடு, வேற்றுமை

அந்நியர் – பிறர், வேறுபடுபவர், வேற்று நாட்டினர்

அந்திய காலம் – முடிவுக்காலம், இறுதிக்காலம்

அந்தியக்கிரியை – ஈமவினை, இறுதிக்கடன்

அந்தியம் – முடிவு, சாவு

அநந்தம் – முதலில்லாதது, அளவில்லாதது, முடிவிலி, அளவற்றது

அநர்த்தம் – அழிவு, கேடு
அநாதி – தொடக்கமிலி, தொடக்கமின்மை
அநாதை – துணையிலி, யாருமிலி
அநியாயம் – முறையின்மை, முறைகேடு
அநீதி – நடுவின்மை, முறைகேடு
அநுகூலம் – சார்பு
அநுட்டித்தல் / அநுஷ்டித்தல் – கைக்கொள்ளல், கடைப்பிடித்தல்
அநுதாபம் – இரக்கம், அருளல், இரங்கல்
அநுதினம் – நாடோறும்
அனுபந்தம் – பிற்சேர்க்கை
அனுபவம் – பட்டறிவு, நுகர்வு
அப்பியாசம் – பயிற்சி, பழக்கம்
அபகரித்தல் – பறித்தல், கவர்தல்
அபத்தம் – பொய், பொய்ம்மை
அபயம் – அச்சமின்மை, அடைக்கலம், தஞ்சம், கையடை
அபராதம் – ஒறுபொருள்
அபரிதம் / அபரிமிதம் – அளவின்மை
அநுசரணை – உறுதுணை
அநுசரித்தல் – பின்பற்றுதல், கடைப்பிடித்தல்
அநுமதி – இசைவு, ஒப்புதல், இணக்கம்
அனுமதிச்சீட்டு – ஒப்புத்துண்டு
அநுவதித்தல் – வழி மொழிதல்
அநேகம் – பல
அநுமானம் – உய்த்துணர்வு, கருதல், அளவை
அபாண்டம் – பெரும்பழி, வீண்பழி
அபாயம் – பேரிடர்

விசாகன்



அபாரம் – அளவின்மை

அபிடேகம்
அபிஷேகம் } – முழுக்கு

அபிநயம் – விறல், மெய்ப்பாடு

அபிப்பிராயம் – எண்ணம், நோக்கம், கருத்து

அபிமானம் – பற்று

அபிமானி – பற்றாளர், பற்றர்

அபிவிருத்தி – விரிவாக்கம்

அபூர்வம் – அருமை

அபேட்சகர் – வேட்பாளர்

அமங்கலி – கைம்பெண்

அமிர்தம் – இனிமை, அருமருந்து, சாவா மருந்து

அமுல் (இந்துஸ்தானி) – நடைமுறை, ஆட்சி

அயோக்கியன் – தகவிலான்

அரசாங்கம் – அரசு

அரவம் – ஒலி, பாம்பு சத்தம்

அலங்காரம் – ஒப்பனை, புனைவு, அணி, அழகு

அலட்சியம் – புறக்கணிப்பு, நோக்கின்மை

அவகாசம் – காலக்கெடு, காலஓய்வு, கால எல்லை

அவசரம் – விரைவு வேகம்

அவசியம் – இன்றியமையாமை, தேவை

அவத்தை
அவஸ்தை } – நிலைமை, துன்பம்

அவதானம் – நுண்ணோக்கு, நோக்கல் கூர்நோக்கு

அவதி – துன்பம், பதற்றவிரைவு

அவம் – வீண்கேடு

அவமானம் – வசை, இழிவு, பழி

அவயவம் – உறுப்பு

அவலம் – துன்பம் கவலை

அற்பம் – சிறுமை

அற்புதம் – புதுமை

# ஆ

ஆக்கினை – கட்டளை, ஒறுத்தல், தொல்லை
ஆக்கிரமிப்பு – கைப்பற்றுதல், வன்கவர்வு
ஆக்கேபம் / ஆக்ஷேபம் – மறுப்புரை
ஆங்காரம் – செருக்கு, இறுமாப்பு, தற்பற்று
ஆச்சரியம் – வியப்பு
ஆசாரம் – ஒழுக்கம், நன்னடை
ஆசி – வாழ்த்து
ஆசீர்வாதம் – வாழ்த்துரை
ஆசை – விருப்பு, வேட்கை, அவா
ஆடம்பரம் – பேரெடுப்பு
ஆஸ்தானம் – அரசவை
ஆஸ்தி – உடைமை
ஆதங்கம் – கலக்கம், ஆவல்
ஆதரவாளர் – பேணுநர், ஓம்புநர், அணுக்கர்
ஆதரவு – சார்பு
ஆதரித்தல் – புரத்தல், பேணுதல்
ஆதவன் – ஞாயிறு, கதிரோன்
ஆதாயம் – உறுதி, நயம்
ஆதாரம் – பற்றுக்கோடு, அடிப்படை நிலைக்களன், சான்று
ஆதி – தொடக்கம்
ஆதிக்கம் – ஆட்சி, உரிமைப்பாடு
ஆதித்தன் – பகலவன், கதிரவன்
ஆதிபத்தியம் – இறைமை
ஆநந்தம் – மகிழ்ச்சி
ஆபத்து – இடையூறு
ஆபரணம் – அணிகலன்
ஆபாசம் – இடக்கர், இழிகாமம்
ஆமோதித்தல் – வழிமொழிதல், உடன்படல், ஏற்றல்

ஆயத்தம் – தொடக்கம், ஏற்பாடு
ஆயுள் – வாணாள்
ஆயுதபாணி – படைக்கலமேந்தி
ஆயுதம் – கருவி, படைக்கலம்
ஆரம் – மாலை
ஆரம்பம் – தொடக்கம்
ஆரம்பித்தல் – தொடங்கல்
ஆராதனை – வழிபாடு
ஆலம் – நஞ்சு, பனித்துளி
ஆலயம் – கோவில்
ஆலோசனை – சூழ்வு
ஆலோசகர் – சூழ்வார்
ஆவேசம் – வெறி, வெறிஉணர்வு

## இ

இங்கிதம் – இனிமை
இச்சை – வேட்கை, விழைவு
இட்டம் / இஷ்டம் – விருப்பு, விழைவு
இடபம் – ஏறு, எருது
இடாம்பீகம் – பேரெடுப்பு
இதயம் – உள்ளம்
இதிகாசம் – வரலாற்றுப் பெருங்கதை
இயந்திரம் – பொறி
இரகசியம் – மறைபொருள், மறை
இரசம் – சாறு, சுவை
இரசனை – நயப்பு, சுவைப்பு
இரசித்தல் – சுவைத்தல், நயத்தல்
இரட்சகன் – காப்போன், காவலன்
இரணகளம் – செருக்களம்
இரணம் – புண், போர்
இரத்தம் – குருதி, செந்நீர்
இரத்தினம் – மணி

இராச்சியம் – அரசு, வேத்தியம்
இராஜா – அரையன்
இராசா – அரசன்
இராசி – கோட்குறி
இராசி மண்டலம் – கோட்குழுமம்
இராணுவம் – படை
இருதயம்,இதயம் – உள்ளம், நெஞ்சு, குருதிப்பை, குலை
இலகு – எளிது, எளிமை
இலக்கம் – எண்
இலஞ்சம் – கையூட்டு
இலட்சம் – நூறாயிரம்
இலட்சியம் – குறிக்கோள்
இலட்சியவாதி – குறிக்கோளாளர்
இலயம், லயம் – ஒடுக்கம், தாளம்
இலவசம் – விலையிலி
இலாபம் – பெருக்கம், பயன்
இலிகிதம் – முடங்கல், திருமுகம், ஓலை
இலிகிதர் – எழுத்தர்
இலேசு – எளிது

## ஈ

ஈநம் – இழிவு
ஈநன் – இழிந்தவன்

## உ

உக்கிரம் – கொடுமை, கடுமை, சினம்
உச்சம் – உயர்ச்சி, மிக்குயர்வு, மீமிசை
உச்சரிப்பு – ஒலிப்பு

உச்சி – முகடு, நுனி

உசாவல் – வினாவுதல், ஆய்தல்

உசிதம் – மேன்மை

உத்தமம் – மேன்மை (சிறப்பு)

உத்தமன் – மேலோன்

உத்தரம் – விடை

உத்தரவாதம் – பொறுப்பு, உறுதிப்படுத்தல்

உத்தரவு – இசைவு, கட்டளை

உத்தரிகை, உத்தரியம் – மேலாடை

உத்தி – விரகு

உத்தியோகம் – தொழில், முயற்சி

உத்தேசம் – அண்ணளவு, நோக்கம், மதிப்பு

உத்வேகம் – மிகவிரைவு, உளவெழுச்சி

உதயம் – எழுகை, தோற்றம்

உதயன் – கதிரவன்

உதரம் – வயிறு, அகடு

உதாசினம் – புறக்கணிப்பு, இகழ்வு

உதாரணம் – சான்று, எடுத்துக்காட்டு

உதிரம் – குருதி, செந்நீர்

உப்பரிகை – நிலாமுற்றம், மேல்மாடம்

உபகரணம் – கருவி

உபகாரம் – உதவி, நன்றி

உபசரணை, உபசாரம் – விருந்தோம்பல், வரவேற்றல்

உபத்திரவம் – இடர், தொல்லை

உபதேசம் – அறிவுரை

உபயோகம் – பயன்

உபரி – மிகுதி

உபாதை – நோ, வலி

உபாயம் – விரகு, சூழ்ச்சி

உருசி – சுவை

உருசிகரம் – சுவையான, இனிமையான

உருசு – சான்று, மெய்

உருசுப்படுத்தல் – மெய்ப்பித்தல், உறுதிப்படுத்தல்

உரோசம் – தன்மானம்

உலோகம் – கனியம்

உலோபம் – இவறண்மை, ஈயாமை

உலோபி – ஈயான்

உல்லாசம் – மிகுகளிப்பு

உவமானம் – ஒப்புமை, ஒப்புப்பொருள்

உவமேயம் – ஒப்புமைக்குரிப் பொருள்

உற்சவம் – திருவிழா, பெருவிழா

உற்சாகம் – ஊக்கம், உளக்கிளர்ச்சி

உன்னதம் – உயர்ச்சி

## ஊ

ஊகம் – ஓர்தல், உய்த்துணர்தல்

ஊகித்தல் – ஓர்தல்

ஊர்ஜிதம் – உறுதிப்பாடு

ஊதா – செந்நீலம்

ஊதாரி – வீண் செலவாளி

ஊந (ன)ம் – குறைவு, இழிவு

## எ

எக்காளம் – பெருநகை, ஒருவகை ஊதுகருவி, பேரொலி

எத்தனம் – முயற்சி

எதார்த்தம் – இயல்பு, இயல்பியம்

எதேச்சை – தன்விருப்பு, தன்விழைவு

எதேச்சாதிகாரம் – தன்விருப்பாட்சி, தன்விழைவாட்சி

எந்திரம் – பொறி

எந்திரவியல் – பொறியியல்

எமகாதகன் – மிகு கொடியன்

எமன் – கூற்றுவன், மறலி, காலன்

## ஏ

| | | |
|---|---|---|
| ஏகபோகம் | – | தனித்துய்ப்பு |
| ஏகம் | – | ஒருமை |
| ஏகன் | – | தனியன் |
| ஏகாந்தம் | – | தனிமை |
| ஏகாதிபத்தியம் | – | தனியிறைமை |
| ஏகோபித்தல் | – | ஒருமுகமாக, ஒருமுகப்படுதல் |
| ஏதம் | – | குற்றம், துன்பம் |
| ஏது | – | காரணம், பொருட்டு, வரின் |
| ஏமம் | – | காப்பு |
| ஏலம் | – | கூறுமை, கூறல் |
| ஏலம் (காய்) | – | மணகம் |
| ஏசியம் / ஹேசியம் | – | கருதுகோள், எதிர்வுகூறல் |

## ஐ

| | | |
|---|---|---|
| ஐக்கியம் | – | ஒற்றுமை, ஒருமைப்படல், ஒன்றுபடல் |
| ஐதீகம் | – | தொல்புனைவுரை |
| ஐயம் (பிச்சை) | – | இரப்பு |
| ஐஸ்வர்யம் | – | செல்வம் |

## ஒ

| | | |
|---|---|---|
| ஒய்யாரம் | – | வீறெழில் |

## ஔ

| | | |
|---|---|---|
| ஔடதம் | – | மருந்து |

## க

கங்கணம்
(கட்டுதல்) – உறுதி (பூணல்)
கசாயம் – குடிநீர்
கட்சி – அணி
கட்டம்
(தெலுங்கு) – நிலை
கட்டம் }
கஸ்டம் } – துன்பம், அருமை, கடுமை
கட்டாயம் – இன்றியமையாமை,
திணிப்பு, உறுதி
கட்டாயப்படுத்தல் – வலியுறுத்தல், திணித்தல்
கட்டியம் – புகழுரை, முற்கூற்று
கடிதம் (தெலுங்கு,
துளு, கன்னடம்) – முடங்கல், திருமுகம்
கடிதாசி (உருது) – தாள்
கடிகாரம் – மணிக்கூடு
கடினம் – வன்மை, கொடுமை, கடுமை
கண்டம் – நிலப்பிரிவு, கழுத்து, மிடறு
கண்டனம் – தாக்குரை, ஒறுப்புரை
கண்டித்தல் – ஒறுத்தல்
கண்டிப்பு – உறுதிப்பாடு
கணம் – குழுமம், நொடிப்பொழுது
கதம்பம் – கலப்பு
கதி – புகல்
கநதி – பெருமை
கப்பம் (திராவிட
மொழிச் சொல்) – வன்பறி
கபடம் – வஞ்சனை, கரவு
கபடு – சூது
கபளீகரம் – முற்றுங்கவரல்
கம்பம் – நடுக்கம், தூண்
கம்பீரம் – தோற்றப்பொலிவு, வீறு,
எடுப்பு

கர்ஜனை – உரப்பொலி, முழக்கம்
கரகோஷம் – கைதட்டல், கையொலி
கரணம் – ஏமாற்று
கரம் – கை
கருணை – இரக்கம்
கருமம் – செயல், திணை, வினை
கலாதி – குழப்பம், எடுப்பு
கலாசாலை – பள்ளிக்கூடம், கல்விக்கூடம், கல்விமனை
கலாநிதி – முனைவர்
கவசம் – மெய்யுறை, காப்பு
கவசவாகனம் – காப்பூர்தி
கவனம் – நோக்கு, விழிப்பு
கனம் – பொறை, சுமை, மாண்பு
கன்னி – குமர், குமரி
கனிஷ்ட – இளநிலை, இளைய

## கா

காகிதம் (உருது) – தாள், இதழ், மடல்
காத்திரம் – பெறுமதி, செறிவு
காதகம் – கொலை
காதகன் – கொலையாளி
காதம் – கொலை, தொலை
காயம் – உடம்பு, புண்
காரியதரிசி – செயலர்
காரியம் – செயல்
காலகதி – காலஓட்டம்
காலாவதி – காலமுடிவு
காலாந்தரம் – காலமுடிவு
காலி (உருது) – வெறுமை, இன்மை
காவாலி – பொறுப்பிலி, ஊர்சுற்றி
காவியம் – பாவியம், தொடர்நிலைச் செய்யுள்

## இ

| | | |
|---|---|---|
| இடாரம் | – | கொப்பரை, கூடாரம் |
| இயாதி | – | புகழ் |
| இரகணம் | – | பற்றுகை, பிடித்தல் |
| இரகம் | – | கோள் |
| இரகம்<br>இருகம் | – | வீடு, இல்லம் |
| இரகித்தல் | – | பற்றுதல், உணர்தல்<br>கொள்ளுதல் |
| இரணம் | – | ஒளி, கதிர் |
| இரந்தம் | – | நூல், ஒருவகை எழுத்து |
| இரமம் | – | ஒழுங்கு, முறைமை |
| இரயம் | – | விலை |
| இராக்கி (உருது) | – | அருவிலை, அருமை |
| இராம்பு (உருது) | – | கராம்பு |
| இராமம் | – | ஊர் |
| இராமியம் | – | ஊர்வழக்கு, நாட்டார்<br>வழக்கு |
| இரி | – | மலை |
| இரியை | – | செய்கை |
| இரீடம் | – | முடி |
| இருட்டினம் | – | கருமை, கறுப்பு |
| இருபை | – | அருள் |
| இருமி | – | நுண்ணுயிர் |
| இல்லாடி<br>(மராத்தி) | – | விரகன், மாறாடி |
| இலி(கன்னடம்,<br>தெலுங்கு) | – | அச்சம், நடுக்கம் |
| இலேசம் | – | கவலை |

## ஈ

| | | |
|---|---|---|
| ஈ | – | இசை |
| ஈதம் | – | இசைப்பாடல் |

கீர்த்தனை – புகழ்ப்பா, இசையுருப்படி
கீர்த்தி – புகழ், இசை
கிலம் – கீற்று
கீனம் – இழிவு, குறைவு

## கு

குங்குமம் – செஞ்சாந்து
குட்டம், குஷ்டம் – தொழுநோய்
குடும்பம் – ஒக்கல், சுற்றம்
குசலம் – நலம்
குசினி (பிரஞ்சு) – சமையலறை, அடுப்படி, அடுக்களை
குதம் – கிடங்கு, மலவாயல்
குதர்க்கம் – விழலுரை, வீணுரை
குதூகலம் – பேருவகை
குந்தகம் – தடை
கும்பம் – குடம், குவியல், திரள்
கும்மாளம் – கூத்தடிப்பு
குரூபி – எழிலிலி, அழகிலி
குரோதம் – காழ்ப்பு, வன்மம், பழிவாங்குணர்வு
குவலயம் – உலகம், ஞாலம்

## கே

கேசம் – தலைமயிர்
கேந்திரம் – நடுவம், நிலையம்
கேலி – பகடி, ஏகடியம், எள்ளல்
கேவலம் – இழிவு, சிறுமை ஈனம்
கேளிக்கை – களியாட்டு

## கை

கைங்கரியம் – செய்கை, உதவி, அறப்பணி
கைதி (உருது) – சிறையாளி

## கோ

| | | |
|---|---|---|
| கோ | – | ஆ |
| கோஷம் | – | முழக்கம் |
| கோஷ்டி | – | குழு |
| கோணம் | – | முடக்கு |
| கோபம் | – | சினம், வெகுளி, சீற்றம் |
| கோரம் | – | கொடுமை |

## ச

| | | |
|---|---|---|
| சக்கரம் | – | உருளை, சில்லு |
| சக்தி | – | ஆற்றல் |
| சக | – | உடன் |
| சகலம் | – | உடன், எல்லாம், அனைத்தும் |
| சகசம் | – | இயல்பு |
| சகவாசம் | – | உறவு, தொடர்பு |
| சகா | – | தோழன், கூட்டாளி |
| சகாயம் | – | துணை |
| சகிப்பு | – | பொறுமை |
| சகுனம் | – | குறி, புட்குறி, எதிர்வுக்குறி, விரிச்சி |
| சகோதரம் | – | உடன்பிறப்பு |
| சகோதரன் | – | உடன்பிறப்பாளன், உடன் பிறந்தான் |
| சகோதரி | – | உடன்பிறப்பாட்டி, உடன் பிறந்தவள் |
| சங்கடம் | – | இடர்பாடு, துன்பம், வருத்தம் |
| சங்கம் | – | கூட்டம், மன்றம் |
| சங்கதி | – | செய்தி |
| சங்கமம் | – | கூடல் |
| சங்கற்பம் | – | உறுதிபூணல் |
| சங்கிலி | – | தொடர், இணையம் |
| சங்கீதம் | – | இசை |

சங்கை – பெருமை, பீடு
சச்சரவு – பிணக்கு
சஞ்சரி – உலவு
சஞ்சரித்தல் – உலவுதல்
சஞ்சலம் – கலக்கம்
சஞ்சிகை – இதழ், தாளிகை
சத்தம் – ஓசை, ஒலி
சத்தியப்பிரமாணம் – உறுதிமொழி
சத்தியம் – உண்மை, வாய்மை, மெய்ம்மை
சத்திரசிகிச்சை – அறுவை மருத்துவம்
சத்திரம் – அறவிடுதி, அறவகம்
சத்து – ஆற்றல், ஊட்டம், சாரம், சாறு
சத்துரு – பகைவன்
சதா – எப்பொழுதும், எக்காலும்
சதி – சூழ்ச்சி, வஞ்சனை
சதுக்கம், சதுரம் – நால்மூலை, நாற்கட்டம்
சதுரங்கம் – கவறு, வட்டு
சந்தடி (தெலுங்கு) – இரைச்சல், ஆரவாரம்
சந்ததி – கால்வழி, வழித்தோன்றல்
சந்தம் – இன்னோசை, அழகு
சந்தர்ப்பம் – வாய்ப்பு, நிகழ்வேளை
சந்தா – முறைப்பணம், முறைக்காசு
சந்தானம் – தலைமுறை, வழிமுறை
சந்தி – கூடல்
சந்தித்தல் – கூடுதல், காணல்
சந்திப்பு – கூடுதல், எதிர்வு, காணுகை
சந்து – பொருத்து
சந்திரன் – நிலவு, திங்கள்
சந்தேகம் – ஐயம்
சந்தை – அங்காடி
சந்தோசம் – மகிழ்ச்சி, களிப்பு
சப்தம் – ஓசை, ஒலி

| | | |
|---|---|---|
| சப்பாத்து (போர்த்துக்கேயம்) | – | மூடுகாலணி |
| சபதம் | – | சூளுரை |
| சபலம் | – | மனஅலைவு, வேண்டா ஆசை |
| சபா | – | பொதியில், மன்று |
| சம்சாரம் | – | துணைவி, மனைவி, குடும்பம், இல்லறம், இணைவி |
| சம்பத்து | – | உடைமை, செல்வம் |
| சம்பந்தம் | – | தொடர்பு, இணைப்பு, பிணைப்பு, உறவு |
| சம்பளம் | – | ஊதியம், பணிப்பணம், திரளம் |
| சம்பவம் | – | நிகழ்வு, நிகழ்ச்சி |
| சம்பவித்தல் | – | நிகழ்தல் |
| சம்பாசணை | – | உரையாடல் |
| சம்பிரதாயம் | – | வழக்கு |
| சம்பூரணம் | – | முழுமை, நிறைவு |
| சம்மதம் | – | இசைவு, இணக்கம், உடன்பாடு |
| சம்மதி | – | உடன்படு, இசை, இணங்கு |
| சம்மேளனம் | – | ஒன்றியம் |
| சமத்து | – | திறமை |
| சமம் | – | நிகர், ஈடு, இணை |
| சமயம் | – | நெறி, பொழுது |
| சமயோசிதம் | – | காலப்பொருத்தம், நேரப் பொருத்தம் |
| சமர்ப்பணம் | – | படையல், காணிக்கை |
| சமரசம் | – | ஒருமிப்பு, பொதுநோக்கு |
| சமாச்சாரம் | – | செய்தி |
| சமாசம் | – | இணையம் |
| சமாதானம் | – | இணக்கம் |
| சமாதி | – | கல்லறை |
| சமிக்ஞை | – | குறிகாட்டல், சைகை |

| | | |
|---|---|---|
| சமீபம் | – | அண்மை |
| சமுக்காளம் | – | விரிப்பு |
| சமுகம் | – | முன்னிலை, வருகை |
| சமுச்சயம் | – | ஐயம் |
| சமுத்திரம் | – | பேராழி, பெருங்கடல் |
| சமுதாயம் | – | மக்கட்குழு, மன்பேராயம் |
| சமூகம் | – | மன்னாயம், குமுகாயம், மக்களாயம் |
| சயம்<br>ஜயம் | – | வெற்றி |
| சயனம் | – | துயிலல், உறக்கம் |
| சர்ச்சை | – | கருத்துமுரண் |
| சர்ப்பம் | – | பாம்பு |
| சர்வகலாசாலை | – | பல்கலைக்கழகம் |
| சர்வம் | – | அனைத்து, எல்லாம் |
| சரண், சரணம் | – | அடைக்கலம், கையடைதல் |
| சரம் | – | கணை, தொடையல் |
| சரமாரி | – | அம்புமழை |
| சரளம் | – | ஆற்றொழுக்கு, ஒழுங்கு, எளிமை |
| சராசரி (உருது) | – | பொதுநிலை |
| சரிதம்<br>சரிதை<br>சரித்திரம் | – | வரலாறு |
| சரீரம் | – | உடல், மெய், யாக்கை |
| சருமம் | – | தோல் |
| சலனம் | – | அசைவு |
| சவம் | – | பிணம் |
| சவாரி | – | செலுத்துகை |
| சவால் (உருது) | – | சூளுரை |
| சவுக்கியம்<br>சௌக்கியம் | – | நலம் |
| சன்மானம் | – | அன்பளிப்பு |
| சன்னத்தம் | – | ஏற்பாடு, மேற்கொள்ளல், மிகுதி |

சன்னதம் – வெறியாட்டு
சனம் – மக்கள்

## சா

சாக்கிரதை } ஜாக்கிரதை } – விழிப்பு
சாகரம் – கடல்
சாகித்தியம் – புலமை, இசைப்பாட்டு, இசையுருப்படிகள்,
சாகுபடி – பயிர்ச்செய்கை, விளைச்சல்
சாசனம் – முறி, கல்வெட்டு
சாசுவதம் – நிலைபேறு, அழியாமை
சாட்சியம் – சான்று, கரி
சாட்டை – முறுக்கு
சாடை } ஜாடை } – குறி, சாயல், போக்கு
சாத்தியம் – இயன்மை, கைகூடல்
சாத்திரம் – இயல், நூல், கணிப்பு
சாத்விகம் – பொறையுடைமை
சாதகம் – பயிற்சி, சார்பு, பிறப்புக் குறிப்பு
சாதம் – சோறு
சாதனம் – கருவி
சாதனை – வினைப்பேறு, செயற்றிறன், அருஞ்செயல்
சாதாரணம் – பொது, பொதுநிலை
சாதி – இனம், பிரிவு
சாதித்தல் – நிலைநிறுத்தல், நிலைநாட்டுதல்
சாது – பொறை, பொறையர்
சாதுரியம் – திறமை, நுண்திறன்
சாந்தம் – அமைதி, பொறை
சாந்தி – தணிவு, அமைதி

| | | |
|---|---|---|
| **சாபம்** | – | கெடுமொழி |
| **சாம்ராஜ்யம்** | – | பேரரசு |
| **சாமம்** | – | நள்ளிரவு, யாமம் |
| **சாமர்த்தியம்** | – | வல்லமை, ஆற்றல், திறமை |
| **சாமான்** | – | பொருள் |
| **சாமான்யம்** | – | பொது |
| **சாயந்திரம்** | – | மாலைநேரம், பிற்பொழுது |
| **சாயம்** | – | நிறம் |
| **சாயை** | – | நிழல் |
| **சாரதி** | – | வலவன், செலுத்துநர், ஓட்டுநர் |
| **சாரம்** | – | சாறு |
| **சாராம்சம்** | – | பொழிப்பு |
| **சாரி** | – | வரிசை |
| **சாலம்** | – | கண்கட்டு, நடிப்பு, போலிப்பு |
| **சாவகாசம்** | – | பொழுதமைபு, காலஊவு |
| **சாவதானம்** | – | உன்னிப்பு, விழிப்பு |
| **சாவி** | – | திறவு, திறப்பு, திறவுகோல் |

## சி

| | | |
|---|---|---|
| **சிகரம் (1)** | – | உச்சி, முகடு |
| **சிகரம் (2) (அலங்காரம்)** | – | முகட்டணி |
| **சிகிச்சை** | – | மருத்துவம், மருந்து, நோயகற்றுமுறை, நோயகற்றல், நோய்தீர்செய்கை |
| **சிகை** | – | தலைமயிர், உச்சி |
| **சிங்கம்** | – | அரிமா, அரி |
| **சிங்காரம்** | – | அழகு, ஒப்பனை |
| **சிங்காசனம் / சிம்மாசனம்** | – | அரியணை, அரசுகட்டில் |
| **சிசு** | – | குழந்தை, குழவி, சேய், மகவு, மழலை |

| | | |
|---|---|---|
| சிட்சை | – | பயிற்சி |
| சிருட்டி<br>சிருஷ்டி | – | படைப்பு |
| சித்தம் | – | உள்ளம், எண்ணம் |
| சித்தர் | – | அறிவர் |
| சித்தாந்தம் | – | கோட்பாடு |
| சித்தி | – | தேர்ச்சி, பேறு |
| சித்திரம் | – | ஓவியம், படம் |
| சித்திரவதை | – | ஆரஞர் |
| சித்து | – | அறிவு |
| சிந்தனை | – | எண்ணம், கருத்து, உள்ளல் |
| சிந்து | – | பாட்டு, கடல் |
| சிந்தூரம் | – | செந்தூள் |
| சிநேகம் | – | நட்பு, கேண்மை |
| சிப்பாய்<br>(உருது, பேர்சியன்) | – | வீரன், மறவன், வயலன் |
| சிபார்சு (உருது) | – | விதப்புரை, பரிந்துரை, வேட்புரை |
| சிரஞ்சீவி | – | நீடுவாழ்வார் |
| சிரத்தை | – | நாட்டம் |
| சிரம், சிரசு | – | தலை |
| சிரமம் | – | கடுமை, கடினம், உழைப்பு |
| சிரேட்டன் | – | மூத்தோன், தலைவன், சிறந்தவன் |
| சிலாக்கியம் | – | மேன்மை, சிறப்பு, புகழ் |
| சிலேடை | – | இரட்டுறு மொழி |
| சிலை | – | கல்லுரு |
| சிற்பசாஸ்திரம் | – | கற்றச்சியல் |
| சிற்பம் | – | கற்றச்சுக்கலை |
| சிற்பி | – | கற்றச்சர் |

## சீ

| | | |
|---|---|---|
| சீக்கிரம் | – | விரைவு |

| | | |
|---|---|---|
| சீட்டி | – | சீழ்க்கை, வீளை |
| சீட்டு (உருது) | – | துண்டு |
| சீதம்<br>சீதளம் } | – | குளிர்ச்சி |
| சீதனம் | – | சீர், சீர்வரிசை, மணக்கொடை |
| சீமாட்டி | – | திருவாட்டி |
| சீமான் | – | திருவாளன் |
| சீலம் | – | ஒழுக்கம், பண்பு, தன்மை |
| சீவன் | – | உயிர் |
| சீவியம்<br>ஜீவியம் } | – | வாழ்க்கை |

சு

| | | |
|---|---|---|
| சுக்கான் | – | திருப்பி, கலந்திருப்பி |
| சுகந்தம் | – | நறுமணம் |
| சுகபோகம் | – | இன்பநுகர்ச்சி |
| சுகம் | – | நலம், எளிமை, இன்பம் |
| சுகவீனம் | – | நலக்குறைவு |
| சுகாதாரம் | – | நலவழி, உடல்நலவியல் |
| சுகித்தல் | – | துய்த்தல், நுகர்தல் |
| சுங்கம் | – | ஆயம் |
| சுங்கான் (உருது) | – | புகைத்தல்குழல் |
| சுத்தம் | – | தூய்மை, கலப்பின்மை |
| சுதந்திரம் | – | தன்னுரிமை, தன்னாட்சி |
| சுதேசி | – | நாட்டவன், நாட்டவள் |
| சுதேசம் | – | தன்னாடு |
| சுண்ணம் | – | நீறு, பொடி |
| சுந்தரம் | – | அழகு |
| சுபதினம் | – | திருநாள், நன்னாள் |
| சுபாவம் | – | இயல்பு |
| சுபீட்சம் | – | மல்லல், செழிப்பு |
| சுமார் | – | ஏறத்தாழ, அண்ணளவு |

சுயநலம் – தன்னலம், தந்நலம்
சுயபாஷை – தன்மொழி, தாய்மொழி
சுயபுத்தி – தன்னறிவு
சுயம் – தன்னிலை
சுயம்பு – தான்தோன்றி
சுயாதீனம் – தன்னாட்சி
சுரங்கம் – அகழிடம்
சுரம் – காய்ச்சல், இசைவரி
சுருதி – இணைவொலி
சுலபம் – எளிமை, எளிது
சுலோகம் – உரிமைமுழக்கம்
சுவர்க்கம் – துறக்கம்
சுவர்ணம் } சொர்ணம் } – பொன்
சுவாசம் – மூச்சு, உயிர்ப்பு
சுவாத்தியம் – காலநிலை
சுவாதீனம் – தன்னாட்சி
சுவாலை – தீப்பிழம்பு
சுவீகாரம் – மகவேற்கை, ஏற்கை
சுவீகரித்தல் – வலிந்தேற்கை, உள்வாங்குகை

## சூ

சூக்குமம் – நுண்மை, அறிவுநுட்பம், மறைபொருள்
சூசகம் – குறிப்பு, அறிகுறி
சூத்திரம் – பொறி, கயிறு, நூற்பா
சூத்திரதாரி – கூத்தாட்டி, இயக்குவிப்போன்
சூது – வஞ்சகம், கரவு
சூரன் – வீரன்
சூரியன் – ஞாயிறு, பகலோன், கதிரவன்
சூனியம் – வெறுமை, இன்மை

## செ

| | | |
|---|---|---|
| செகம்<br>ஜெகம் | – | உலகு |
| செலாவணி<br>(உருது) | – | பணமாற்று |
| சென்மம்<br>ஜென்மம் | – | பிறப்பு, தோற்றம் |
| செனனம்<br>ஜெனனம் | – | பிறப்பு, தோற்றம் |

## சே

| | | |
|---|---|---|
| சேகரம் | – | தொகுப்பு, ஈட்டுதல் |
| சேட்டை | – | குறும்பு |
| சேடம் | – | இறுதிமூச்சு |
| சேடி | – | தோழி, பாங்கி |
| சேணம் | – | பரிமெத்தை, பரியணை |
| சேதம் | – | சிதைவு, கேடு |
| சேதனம் | – | அசைவு, பிரிப்பு |
| சேது | – | செய்கரை |
| சேவகன் | – | பணியாளன், ஊழியன் |
| சேவை | – | தொண்டு, பணி |
| சேனாபதி | – | படைத்தலைவன் |
| சேனை | – | படை |
| சைக்கிள்<br>(ஆங்கிலம்) | – | மிதிவண்டி |
| சைனியம் | – | படை |
| சொகுசு | – | இன்னலம், உயரின்பம் |
| சொப்பனம் | – | கனவு |
| சொர்க்கம்<br>சுவர்க்கம் | – | துறக்கம் (வீரருக்குரியது)<br>விண்ணுலகு |

## சொ

சொரூபம் – நல்லெழில்

## சோ

சோக்கு – பகட்டு, நல்நிறைவு
சோகம் – அவலம், துன்பம்
சோடனை, ஜோடனை – புனைவு, அழகு செய்தல்
சோடி, ஜோடி – இணை
சோதனை – தேர்வு
சோதி, ஜோதி – சுடர்
சோதிடம், ஜோதிடம் – கணியம், கணிப்பு
சோபம் – அழகு, வனப்பு, எழில்
சோபனம் – வாழ்த்து
சோபித்தல் – ஒளிர்தல், இலங்குதல்
சோபை – ஒளி
சோரம் – களவு, வஞ்சனை
சோலி (தெலுங்கு) – வேலை, தொழில், சிக்கல்

## சௌ

சௌக்கியம் – நலம்
சௌகரியம் – உயரின்பம், இன்னலம்
சௌந்தரியம் – எழில், வனப்பு
சௌபாக்கியம் – பெரும்பேறு

## ஞா

| | | |
|---|---|---|
| ஞாபகம் | – | நினைவு |
| ஞாயம் | – | நெறி, முறை |
| ஞானம் | – | அறிவு, கல்வி |
| ஞானி | – | அறிவன், முனைவன் |

## ட

| | | |
|---|---|---|
| டப்பா (இந்தி) | – | சிமிழ், அடைப்பி |
| டம்பம் | – | பகட்டு |

## டா

| | | |
|---|---|---|
| டாம்பீகம் | – | மேட்டிமை |

## த

| | | |
|---|---|---|
| தகவல் (அரபு) | – | செய்தி |
| தகனம் | – | எரிப்பு |
| தசம் | – | பத்து |
| தசாப்தம் | – | பத்தாண்டு |
| தசை | – | ஊன் |
| தட்சிணை | – | காணிக்கை |
| தணிக்கை | – | கட்டுப்பாடு, தடுப்பு, நீக்கம் |
| தணிக்கைசெய்தல் | – | கட்டுப்படுத்தல், தடுத்தல், நீக்குதல் |
| தத்தம் | – | விழைவீக்க, கொடை, மணமகனளிப்பு, மணமகளளிப்பு |
| தத்து | – | மகவளிப்பு, மகவேற்பு |
| தத்துவம் | – | உண்மை, மெய்யியல், உரிமை |

தத்ரூபம் – மெய்யுரு, நேர்த்தோற்றம்
தந்தம் – பல், மருப்பு
தந்தி – தொலைவரி, இசைநரம்பு
தந்திரம் – சூழ்ச்சி
தபால் – திருமுகம், முடங்கல்
தம்பதி – மணவிணையர், இல்வாழ்நர்
தம்பம் (பிராகிருதம்) – தூண், கம்பம், கால்
தமாஷ் (அரபி) – வேடிக்கை
தயார் – அணியம்
தயாரித்தல் – உருவாக்கம், ஆக்கல்
தயாளம் – அருண்மை
தயிலம் – நெய்
தரகன் – முகவன்
தர்பார் – ஓலக்கம்
தர்க்கம் – சொற்போர், அளவையியல்
தர்மம் – அறம், கொடை
தரணி – உலகு
தரப்பு – பக்கம், சார்பு
தராசு – துலாக்கோல், துலை
தராதரப்பத்திரம் – தகுதிச் சான்றிதழ்
தராதரம் – ஏற்றத்தாழ்வு, தகுதி
தரித்தல் – நிலைத்தல், நிற்றல்
தரித்திரம் – மிடி, நிரப்பு, வறுமை
தருணம் – பொழுது
தலம், ஸ்தலம் – இடம்
தனம் – செல்வம்
தஸ்தாவேஜ் (உருது) – ஆவணம்

## தா

தாக்கல் (உருது) – பதிவு
தாகம் – விடாய், வேட்கை

தாசன், தாசி – அடிமை
தாபகர், ஸ்தாபனர் – நிறுவுனர்
தாபனம், ஸ்தாபனம் – நிறுவனம்
தாபிதம் – நிறுவல்
தாட்சண்யம் – கண்ணோட்டம்
தாம்பூலம் – வெற்றிலை, பாக்கு, வெள்ளடை
தாமதம் – காலந்தாழ்த்தல், பிந்துதல்
தார்மீகம் – அறப்பண்பு
தாரகை – உடு, விண்மீன்
தாரணி – உலகு
தாரம் – மனைவி, துணைவி, இணைவி
தாவரம் – நிலைத்தழை, மரஞ்செடி கொடி
தானியம் – கூலம்
தானம் – ஈகம், கொடை
(ஸ்)தானம் – இடம்
தாற்பரியம் – உட்பொருள், பொருள், குறிப்புப்பொருள்

## தி

திக்கு – பால், பக்கம்
திகதி – நாள்
திடம் – உறுதி, வன்மை
தியாகம் – ஈகம், தற்கொடை
தியானம் – உள்ளொன்றல்
திரணம் – புல், துரும்பு
(ஸ்)திரம் – நிலை, உறுதி
திரவம் – நீர்மம், பாயி
திரவியம் – செல்வம், பொருள்

திராட்சை – கொடி, முந்திரி
திரிகரணம் – மூவியக்கி (மனம், மொழி, மெய்)
திருப்தி – மனநிறைவு
திலகம் – பொட்டு, மேன்மை
தினகரன் – கதிரவன்
தினசரி – நாடோறும், நாளிதழ்
தினுசு (உருது) – வகை

## தீ

தீட்சணியம் – கூர்மை
தீபம் – விளக்கு, ஒளி
தீரம் – கரை (ஆற்றங்கரை), துணிவு, திடம்
தீர்க்கதரிசி – தொலைநோக்கர்
தீர்க்கம் – நீட்சி, கூர்மை, தெளிவு, முடிவு
தீர்க்காலோசனை – நீள்சூழ்வு
தீர்க்காயுசு – நெடுவாழ்வு
தீவாந்தரம் – தொலைவிடம்
தீவனம் – தீன்
தீவிரம் – விரைவு, உறுதி, உறுதிப்பாடு

## து

துக்கம் – துன்பம், துயரம், கவலை
துஷ்டன் – கொடியோன், தீயோன்
துதி – போற்றுதல்
துப்பாக்கி – துமுக்கி
துர் – தீய, கெட்ட
துன்மார்க்கர் – தீநெறியர்
துரிதம் – விரைவு
துருவம் – கோடி, அசையாநிலை, நிலைப்பு, முனை

துரோகம் – இரண்டகம்
துரோகி – இரண்டகர்
துல்லியம் – தெளிவு
துவம்சம் – அழித்தல், சிதைத்தல்
துவாரம் – துளை, வாயில், வழி
துவேஷம் – காழ்ப்பு, வெறுப்பு

## தூ

தூசணம் } – இழிமொழி, வசை
தூஷணம் }
தூபம் – புகை
தூபம்போடல் – தூண்டிவிடல்
தூரதிருஷ்டி – தொலைநோக்கு
தூரம் – தொலை, தொலைவு, சேய்மை
தூலம் – பருமை, நுண்மை, புலக்காட்சி

## தே

தேகம் – உடல், யாக்கை, மெய்
தேகாப்பியாசம் – உடற்பயிற்சி
தேசம் – நாடு
தேதி } – நாள்
திகதி }
தேயு } – ஒளி, தீ
தேஜஸ் }

## தை

தைரியம் – உறுதி, திட்பம்
தைலம் – எண்ணெய்

## தொ

தொப்பி – கவிப்பு
தொனி – ஒலி, குறிப்பு, குறிப்புப் பொருள்

## தோ

தோசம்
தோஷம் } – குற்றம், வழு
தோத்திரம் – வாழ்த்து, புகழ்ப்பா
தோம்பு – நிலவுரிமை, ஆவணம்
தோரணம் – அணித்தொங்கல்

## ந

நகம் – உகிர்
நகல் (அரபு) – படி
நகுலம் – கீரி
நடுநிசி – நள்ளிரவு, நள்ளல்
நட்சத்திரம் – உடு, விண்மீன்
நட்டம்
நஷ்டம் } – கேடு, இழப்பு
நதி – ஆறு
நயனம் – விழி, கண்
நந்தவனம் – பூங்கா, பூஞ்சோலை, பொழில்
நபர் (அரபு) – ஆள்
நமஸ்காரம் – வணக்கம்
நர்த்தனம் – கூத்து
நரர் – மக்கள்
நவம் – ஒன்பது, புதுமை

| | | |
|---|---|---|
| நவீனம் | – | புதினம், புதுமை |
| நளினம் | – | தாமரை |

## நா

| | | |
|---|---|---|
| நாசம் | – | அழிவு, கேடு |
| நாசி | – | மூக்கு |
| நாஸ்தி | – | இன்மை |
| நாஸ்திகம் | – | இறையின்மை |
| நாதம் | – | ஓசை |
| நாதன் | – | தலைவன் |
| நாதி | – | புரவலன் |
| நாமம் | – | பெயர் |
| நாயகன் | – | தலைவன் |
| நாயகி | – | தலைவி |
| நாராசம் | – | இருப்பாணி |

## நி

| | | |
|---|---|---|
| நிக்கிரகம் | – | அழிப்பு, ஒறுப்பு |
| நிச்சயம் | – | உறுதி, திண்ணம் |
| நிச்சயித்தல் | – | உறுதிப்படுத்தல் |
| நிசம், நிஜம் | – | உண்மை |
| நிசி | – | நள்ளிரவு, நள்ளல் |
| நிட்டூரம் | – | கொடுமை |
| நித்தியம் | – | நாடோறும், நிலைபேறு |
| நித்திரை | – | தூக்கம், துயில், உறக்கம் |
| நிதம் | – | நாடோறும் |
| நிதர்சனம் | – | கண்கூடு, நேர்காட்சி, உண்மை |
| நிதானம் | – | விழிப்பு |
| நித்திலம் | – | முத்து |

| | | |
|---|---|---|
| நிதி | – | செல்வம், திரு |
| நிந்தனை | – | வசை, தூற்றல் |
| நிபந்தனை | – | வரையறை |
| நிபுணர் | – | வல்லுநர் |
| நிம்மதி | – | மன அமைதி |
| நிமிடம் / நிமிஷம் | – | மணித்துளி |
| நிமித்தம் | – | பொருட்டு, குறி |
| நியதி | – | ஒழுங்கு, ஊழ் |
| நியமம் | – | ஒழுங்கு, கட்டுப்பாடு, வரையறை |
| நியமனம் | – | அமர்த்தல் |
| நியாயம் | – | முறை |
| நிர்ணயம் | – | வரையறை, தீர்மானம், முடிவுசெய்தல் |
| நிர் | – | அல், இல் |
| நிர்வகித்தல் | – | செயற்படுத்தல் |
| நிர்வாகம் | – | நடத்துகை, ஆற்றுகை |
| நிர்ப்பந்தம் | – | நெருக்கடி |
| நிர்வாகி | – | ஆற்றுநர் |
| நிர்மாணம் | – | நிறுவுகை |
| நிர்மூலம் | – | முற்றழிவு, பேரழிவு |
| நிர்வாணம் | – | அம்மணம் |
| நிரபராதி | – | குற்றமிலி |
| நிராகரித்தல் | – | மறுத்தல், தள்ளிவிடல் |
| நிராசை | – | அழிவிழைவு |
| நிராயுதபாணி | – | கருவியில்கையர் |
| நிருபர் | – | செய்தித்தொடர்பாளர், செய்தியாளர் |
| நிருபம் | – | அறிக்கை |
| நிரூபித்தல் | – | நிறுவுதல் |
| நிவாரணம் | – | இடரொழிப்பு |
| நிவிர்த்தி | – | நீக்கம், நிறைவுசெய்தல் |

## நீ

நீசம் – இழிவு
நீதி – முறை, நடு
நீதிபதி – நடுவர்
நீதிமன்றம் – முறைமன்றம், முறைமன்று,
நீதிநூல் – அறநூல்

## நூ

நூதனம் – புதுமை, அருமை

## ப

பக்குவம் – தகுதி, முதிர்ச்சி
பக்தர் – அன்பர், பற்றர்
பக்தி – அன்பு, பற்று
பகிரங்கம் – வெளிப்படை
பகிஸ்காரம் – புறக்கணிப்பு
பகீரதப் பிரயத்
தனம் – பெருமுயற்சி, கடுமுயற்சி
பங்கம் – குறை, சேறு, குற்றம், ஊறு, கூறு, பழுது
பச்சாத்தாபம் – கழிவிரக்கம்
பட்சணம் – பண்ணியம்
பசாசு – பேய்
பசு – ஆ
பட்டாளம் – படையணி
பண்டிகை – பெருநாள்
பண்டிதர் – துறைத்திறல்
பத்தியம் – செய்யுள், பதவுணா
பத்திரம் – விழிப்பு, காவல், ஆவணம், இலை, தாள்

| | | |
|---|---|---|
| பத்திரிகை | – | தாள், செய்தித்தாள் |
| பத்திரிகையாசிரியர் | – | இதழாசிரியர் |
| பதம் | – | சொல், நிலை |
| பதவி | – | தொழில்நிலை, நிலை |
| பதார்த்தம் | – | சொற்பொருள், சொல், உணவுப்பொருள் |
| பதி | – | தலைவன், அரசன், ஊர் |
| பந்தம் | – | முடிச்சு,கட்டு, தளை, பற்று, சூள் |
| பயங்கரம் | – | பேரச்சம், உட்கு |
| பயங்கரவாதம் | – | உட்கம் |
| பயணம் | – | செலவு |
| பயம் | – | அச்சம் |
| பரதேசி | – | வேற்றுநாட்டவன், பிறநாட்டான், ஏதிலி |
| பரம்பரை } பரவணி } | – | கால்வழி, தலைமுறை, மரபு |
| பரவசம் | – | மிகுகளிப்பு |
| பரஸ்பரம் | – | ஒன்றுக்கொன்று, ஒருவர்க்கொருவர், ஒத்திசைவு |
| பராக்கிரமம் | – | தறுகண், பேராண்மை, துப்பு |
| பராதீனம் | – | பிறர்கைப்படல் |
| பராமரித்தல் | – | பேணுதல், காத்தல் |
| பரிகாசம் | – | ஏளனம், பழிப்பு |
| பரிகாரம் | – | கழுவாய், இடர்நீக்கம் |
| பரிச்சயம் | – | அறிமுகம், பழக்கம் |
| பரிசிலனை | – | ஆய்தல் |
| பரிசுத்தம் | – | மீத்தூய்மை, மிகுதூய்மை |
| பரிசோதனை | – | ஆய்வு |
| பரிணமித்தல் | – | நிலைமாற்றம், தோன்றுதல் |
| பரிணாமம் | – | கூர்ப்பு |
| பரிதாபம் | – | இரங்குதல், இரக்கம் |
| பரிபாலனம் | – | ஆளுகை, காப்பு |

| | | |
|---|---|---|
| பரிபாஷை | – | குறியீட்டு மொழி, குழூஉக்குறி |
| பரிபூரணம் | – | முழு நிறைவு |
| பரிமளம் | – | நறுமணம் |
| பரிமாணம் | – | அளவு |
| பரிவர்த்தனை | – | ஏற்பீவு |
| பரிவாரம் | – | சுற்றம், சூழ்வோர், கிளைஞர் |
| பரீட்சை | – | தேர்வு |
| பரோபகாரம் | – | பிறர்க்குதவல் |
| பலம் | – | வலு |
| பலவந்தம் | – | வன்முறை |
| பலவீனம் | – | வலிக்குறை |
| பலன் | – | பயன் |
| பலாத்காரம் | – | எல்லைமீறல், வன்செயல் |
| பலாபலன் | – | பெறுபேறு |
| பலி | – | இரை, காணிக்கை, மடை |
| பலிதம் | – | கைகூடல், நிறைவேற்றம் |
| பவனம் | – | வளி |
| பஸ்பம் | – | நீறு, பொடி |

## பா

| | | |
|---|---|---|
| பாக்கி | – | நிலுவை |
| பாக்கியசாலி | – | பேறுளார் |
| பாக்கியம் | – | பேறு |
| பாகுவாகு | – | தோள் |
| பாசபந்தம் | – | பற்றுறுதி |
| பாசம் | – | தளை, கட்டு, பற்று |
| பாஷா, பாஷை, பாடை | – | மொழி |
| பாஷாணம் | – | நச்சுப்பொடி |
| பாடியம், பாஷ்யம் | – | பேருரை |

பாணம் – அம்பு
பாணி – கை, நீர்
பாண்டம் – கொள்கலம்
பாண்டித்தியம் – துறைத்திறன்
பாத்திரம் – கலம், தகுதி
பாதகம் – பெருங்கேடு, தடை
பாதகன் – பெருங்கேடன்
பாதம் – கால், அடி, தாள்
பாதாளம் – கீழுலகம், கீழ்நிலம்
பாரபட்சம் – கண்மூடல், பக்கச்சார்பு
பாரம் – சுமை, பொறுப்பு, பொறை
பாரம்பரியம் – மரபுவழி, மரபியல்
பாராயணம் – நெட்டுரு, ஓதுதல்
பாரிசம் – பக்கம், உடலின் ஒருகூறு
பாரிசவாதம் – பக்க இழுப்பு
பாமரன் – படிப்பிலி
பாலகன்
பாலகி } – குழந்தை
பாலன் – காப்போன், அரசன், குழந்தை
பாலனம் – காப்பு, காவல்
பாலியம் – குழந்தைப்பருவம்
பாரதி – கலைமகள்
பாரி – மனைவி, இணைவி, துணைவி
பாவம் – மெய்ப்பாடு, தீவினை
பாவனை – நிகர்வினை, போலிப்பு, பயன்பாடு
பானம் – பருகை, நீரம்
பஸ்பம் – நீறு, பொடி

## பி

பிச்சை – இரப்பு, இரத்தல்
பிசாசு – பேய்

| | | |
|---|---|---|
| பிடிவாதம் | – | விடாப்பிடி |
| பிதா | – | தந்தை, தகப்பன் |
| பின்னம் | – | சிதைவு, கூறு |
| பிரக்ஞை | – | தன்னுணர்வு, உணர்வு |
| பிரகடனம் | – | வெளிப்படுத்துகை |
| பிரகாசித்தல் | – | ஒளிர்தல் |
| பிரகாசம் | – | ஒளிர்வு |
| பிரச்சாரம் | – | பரப்புகை |
| பிரச்சினை / பிரச்னை | – | சிக்கல் |
| பிரசங்கம் | – | சொற்பொழிவு, உரையாற்றல் |
| பிரசவம் | – | மகப்பேறு |
| பிரசன்னம் | – | வருகை, தோற்றம் |
| பிரசித்தம் | – | வெளிப்படை, நன்கறிகை |
| பிரசித்தி | – | நன்கறிகை |
| பிரசுரம் | – | வெளியீடு |
| பிரசை / பிரஜை | – | குடி |
| பிரத்தியட்சம் | – | வெளிப்படை, கண்கூடு |
| பிரதமம் | – | முதன்மை |
| பிரதாபம் | – | பெருமை, பரவுபுகழ் |
| பிரதானம் | – | முதன்மை |
| பிரதானி | – | முதன்மைப்பணியர் |
| பிரதி | – | படி, மாற்று, மாற்றுநிலை |
| பிரதிநிதி | – | சார்பாளர், சார்பர், நிகரர், பகரர் |
| பிரதிபலன் | – | கைம்மாறு |
| பிரதிபலிப்பு | – | எதிர்த்தோற்றுகை |
| பிரதிபலித்தல் | – | எதிர்த்தோற்றுதல் |
| பிரதிபிம்பம் | – | எதிருரு |
| பிரதிபேதம் | – | பாடவேறுபாடு |
| பிரதிவாதம் | – | எதிருரை |
| பிரதிவாதி | – | எதிராளி |

| | | |
|---|---|---|
| பிரபஞ்சம் | – | பல்லுலகு |
| பிரபலம் | – | பலரறிநிலை |
| பிரபை | – | ஒளி |
| பிரமாண்டம் | – | மாபெரும் |
| பிரமாணம் | – | நெறி, விதி |
| பிரமாதம் | – | மிகுதிறம், மிகையளவு |
| பிரமிப்பு | – | திகைப்பு, மலைப்பு |
| பிரமுகர் | – | முதன்மையர் |
| பிரமை | – | மயக்கம் |
| பிரயத்தனம் | – | நெறிமுறை, முயற்சி |
| பிரயாணம் | – | செலவு |
| பிரயாணி | – | வழிச்செல்வார், தொலைச்செல்வார், வழிப்போக்கர் |
| பிரயோகம் | – | கையாள்கை |
| பிரலாபம் | – | ஓலம், பிதற்றல் |
| பிரவாகம் | – | பெருக்கு |
| பிரவேசம் | – | நுழைவு |
| பிரளயம் | – | இறுதி அழிவு, ஊழி |
| பிரஸ்தாபம் | – | முன்வைத்தல், எடுத்துரைத்தல் |
| பிரஷ்டம் | – | வெளியேற்றுகை |
| பிராணவாயு | – | உயிரகம் |
| பிராணன் | – | உயிர் |
| பிராணி | – | உயிரி |
| பிராமணன் | – | பார்ப்பான் |
| பிராயச்சித்தம் | – | கழுவாய்,உறுதி |
| பிராயம் | – | பருவம் |
| பிரார்த்தனை | – | வழிபாடு, வேண்டுதல் |
| பிரியம் | – | பற்று,விருப்பு |
| பிரேதம் | – | பிணம்,சவம் |
| பிரேரணை | – | முன்மொழிபு |
| பிரேரித்தல் | – | முன்மொழிதல் |

## பீ

பீடிகை – முன்னுரை,தொடக்கம்
பீடை – துன்பம், பிணி
பீதி – அச்சம்

## பு

புட்பம்
புஸ்ம்ப } – பூ,மலர்
புயம் – தோள்
புஷ்டி – வலு
புத்தி – அறிவு
புத்திரன் – மகன்
புத்திரி – மகள்
புராணம் – பழங்கதை,தொன்மம்
புராதனம் – பழமை,
புருடோத்தமன் – நம்பி
புவனம்
புவி } – நிலம்,உலகு
புளகம்
புளகிதம் } – மயிர்க்கூச்செதறில்
புனர் – மறு
புனிதம் – தூய்மை

## பூ

பூகம்பம் – நிலநடுக்கம்
பூகோளம் – ஞாலவுண்டை
பூச்சியம் – இன்மை
பூசை – வழிபாடு
பூபாளம் – புறநீர்மை
பூமி – ஞாலம்
பூர்த்தி – முடித்தல், முடிவு
பூர்வாங்கம் – தொடக்கம்

| | | |
|---|---|---|
| பூர்வீகம் | – | பழைமை |
| பூரணம் | – | நிறைவு |
| பூரணை | – | நிறை |
| பூரா | – | முழுமையாக, எல்லாம் |

## பே

| | | |
|---|---|---|
| பேட்டி | – | செவ்வி |
| பேட்டை | – | ஒதுக்ககம், வட்டகை |
| பேதம் | – | வேறுபாடு, வேற்றுமை |
| பேதி | – | கழிச்சல் |
| பேரம் | – | விலைபேசல், முற்பேச்சு |
| பேனா | – | எழுதுகோல் |

## பை

| | | |
|---|---|---|
| பைத்தியம் | – | விசர், உளப்பிறழ்வு, வெறி |

## பொ

| | | |
|---|---|---|
| பொக்கிஷம் (தெலுங்கு) | – | கருவூலம், பெரும்பொருள் |
| பொருளாதாரம் | – | பொருண்மியம் |

## போ

| | | |
|---|---|---|
| போகம் | – | துய்ப்பு |
| போசனம் | – | உண்டி, உணவு |
| போஷகர் | – | புரவலர், காப்பாளர் |
| போதம் | – | அறிவு |
| போதனை | – | அறிவூட்டல் |

போதை – வெறி, மயக்கம்
போஷாக்கு – ஊட்டம்

## பௌ

பௌர்ணமி – வெள்ளுவா, முழுநிலவு, முழுநிலா
பௌராணிகம் – தொன்மவியல்

## ம

மகத்துவம் – மேன்மை, பெருமை, மாட்சி, மாண்பு
மகரந்தம் – பூந்துகள்
மகரம் – சுறா
மகா – மா, பெரிய
மகிமை – பெருமை, மேன்மை
மகுடம் – முடி
மகோற்சவம் – திருவிழா, பெருவிழா
மகோன்னதம் – பெருஞ்சிறப்பு
மயானம் – சுடுகாடு,சுடலை
மச்சம் – மீன்,மறு
மசாலை(உருது) – கறிக்கூட்டு
மசோதா (உருது) – சட்டமூலம்
மஞ்சம் – கட்டில்
மஞ்சரி – பன்மலர்க்கொத்து
மஞ்சனம் – திருமுழுக்கு
மண்டூகம் – தவளை
மத்தம் – பிடரி
மத்திமம் – இடைநிலை, நடு
மத்தியஸ்தம் – நடுவுநிலை
மத்தியானம் – நண்பகல்

| | | |
|---|---|---|
| மதம் | – | நெறி,கொள்கை, கோட்பாடு,கொழுப்பு |
| மதுரம் | – | இனிமை |
| மதோன்மத்தம் | – | மீற்செருக்கு,மிகுவெறி |
| மந்தகதி | – | மென்விசை |
| மந்தகாசம் | – | புன்முறுவல் |
| மந்திரம் | – | மறைமொழி |
| மந்திரி | – | அமைச்சர் |
| மமதை | – | இறுமாப்பு,செருக்கு, புறப்பற்று |
| மரகதம் | – | பச்சை,பச்சைக்கல் |
| மரணம் | – | இறப்பு,சாவு |
| மரியாதை | – | மதிப்பு |
| மனனம் | – | நெட்டுரு |
| மனஸ்தாபம் | – | மனவேறுபாடு (மனத்தாங்கல்) |
| மனுசன் | – | மாந்தன்,ஆடவன் |
| மனோகரம் | – | மனக்கவர்ச்சி, மனஈர்ப்பு |
| மனோதைரியம் | – | மனத்திடம், மனவலி, மனவுறுதி |
| மனோரஞ்சிதம் | – | மனஇன்பம், மனமகிழ்ச்சி |
| மனோரதம் | – | எண்ணத்தேர், எண்ணக்கோட்டை |
| மனோராஜ்யம் | – | மனக்கோட்டை |
| மனோவிகாரம் | – | மனவூறு |
| மனோவேகம் | – | எண்ணவிரைவு, மனவிரைவு |

## மா

| | | |
|---|---|---|
| மாகாணம் | – | மாநிலம் |
| மாங்கலியம் | – | தாலி, மாணிழை |
| மாச்சரியம் | – | மனக்காழ்ப்பு |
| மாதா | – | அன்னை, தாய் |

மாதாந்தம் – மாதந்தோறும்
மாது – பெண்
மாந்திரீகம் – மறைமொழிவினை
மாநியம் – இறையிலி
மாமிசம் – ஊன், புலால், இறைச்சி
மாமூல் – வழமை
மார்க்கம் – வழி, நெறி
மாருதம் – காற்று
மாலுமி
(உருது, பேர்சியன்) – மீகான், கப்பலோட்டி
மாளிகை – மாடமனை, அரண்மனை
மாஜி – பழைய, முன்னாள்

## மி

மிதப்போக்கு
மிதவாதம் } – அமைதிப்போக்கு
மித்திரன் – நண்பன், துணைவன்
மிதம் – அளவு, மட்டு
மிருகம் – விலங்கு
மிருது – மென்மை
மிலேச்சத்தனம் – பண்பின்மை
மிலேச்சர் – பண்பிலி

## மு

முக்கியம் – முதன்மை
முகாந்தரம் – மூலம், நோக்கம்
முகாம் (அரபு) – தங்கிடம்
முகூர்த்தம் – நல்லோரை, நன்னேரம்
முண்டாசு – தலைப்பாகை
முலாம் – மேற்பூச்சு

## மூ

| | | |
|---|---|---|
| மூடர் | – | முழுமகன் |
| மூர்க்கன் | – | முரடன் |
| மூர்ச்சை | – | அறிவுகெடல், அறிவிழத்தல் |

## மே

| | | |
|---|---|---|
| மேகம் | – | முகில், எழிலி, கொண்டல் |
| மேதாவிலாசம் | – | மீயறிவு, மீத்திறன் |
| மேதினி | – | உலகம் |
| மேதை | – | மீத்திறலர் |
| மேனி | – | உடல் |

## மை

| | | |
|---|---|---|
| மைதானம் | – | திடல், வெளியிடம் |
| மைனர் (ஆங்கிலம்) | – | இளவல் |

## மோ

| | | |
|---|---|---|
| மோகம் | – | பெருவேட்கை |
| மோகனம் | – | மனமயக்கம், மயக்குகை |
| மோட்ஷம் | – | வீடு |
| மோட்டார் (ஆங்கிலம்) | – | உந்தி, உந்து |

## மௌ

| | | |
|---|---|---|
| மௌசு | – | பெருமதிப்பு |

| | | |
|---|---|---|
| மௌலி | – | மணிமுடி |
| மௌனம் | – | அமைதி, வாளாமை, பேச்சின்மை, பேசாநோன்பு |
| மௌனாஞ்சலி | – | அமைதிவணக்கம் |

## ய

| | | |
|---|---|---|
| யத்தனம் | – | முயற்சி |
| யதார்த்தம் | – | இயல்புநிலை, உண்மைநிலை |
| யந்திரம் / இயந்திரம் | – | பொறி |
| யமன் | – | காலன், கூற்றுவன் |

## யா

| | | |
|---|---|---|
| யாகம் | – | வேள்வி |
| யாசகம் | – | இரப்பு |
| யாசகன் | – | இரவலன், இரப்போன் |
| யாத்திரை | – | வழிச்செலவு, வழிநடை |
| யாதவன் | – | இடையன் |

## யு

| | | |
|---|---|---|
| யுத்தி | – | செய்திறன், விரகு |
| யுகம் | – | ஊழி |
| யுத்தம் | – | போர் |
| யுவதி | – | இளம்பெண் |
| யுவராஜன் | – | இளவரசன் |
| யுவன் | – | இளைஞன் |

## யூ

யூகம் – எண்ணம், கருத்து
யூகித்தல் – கருதல்

## யோ

யோக்கியதை – தகுதி
யோக்கியம் – தகுதி, ஒடுக்கம்
யோக்கியன் – தக்கோன்
யோகம் – நல்வினை, ஒழுக்கம்
யோசனை – ஓர்தல், கருத்துநினைவு, நினைப்பு

## யௌ

யௌவனம் – இளமை, அழகு

## ர

ரகசியம் – மறைபொருள், பூடகம்
ரகம் – வகை, தரம், பிரிவு
ரகளை – குழப்பம்
ரசம் – சுவை, சாறு
ரசனை – சுவைத்தல், சுவைப்பு
ரஞ்சகம் – கவர்ச்சி, விருப்பு
ரட்சகன் – காப்போன், புரப்போன், புரவலன்
ரட்சித்தல் – காப்பாற்றல், பேணுதல், ஓம்பல், காத்தல், புரத்தல்
ரணம் – புண், போர்
ரத்தம் – செந்நீர், குருதி

ரதம் – தேர், ஊர்தி
ரத்து (அரபு) – நீக்குகை, கைவிடல்
ரம்மியம் – அழகு, வனப்பு
ரம்பம் – அரிவாள்

## ரா

ராகம் – பண்
ராங்கி (ஆங்கிலம்) – செருக்கு
ராஜதானி – தலைநகர், கோநகர்
ராசி – பொருத்தம், கோள்
ராட்டினம் – சுழலி
ராணுவம் – படை
ராஜினாமா – விலகல், பணிவிலகல்
ராஜோபசாரம் – பேரோம்பல்

## ரி

ரிக்ஷோ – இழுவை, மிதிஇழுவை
ரிஷி – அறிவன்

## ரீ

ரீங்காரம் – வண்டொலி
ரீதி – போக்கி, முறைமை

## ரு

ருசி – துய்ப்பு, சுவை
ருசு (உருது) – மெய்ப்பித்தல், நிறுவல், எண்பித்தல்
ருது – பருவம்

## ரூ

| | | |
|---|---|---|
| ரூபம் | – | வடிவம் |

## ரே

| | | |
|---|---|---|
| ரேகை | – | வரி, கோடு |

## றொ

| | | |
|---|---|---|
| றொக்கம் | – | முழுத்தொகை |

## ரோ

| | | |
|---|---|---|
| ரோகம் | – | நோய், பிணி |
| ரோகி | – | நோயாளி |
| ரோசம் | – | தன்மானம் |
| ரோந்து | – | காவலுலா |
| ரோமம் | – | மயிர் |

## ரௌ

| | | |
|---|---|---|
| ரௌடி (ஆங்கிலம்) | – | முறையிலி, ஒழுங்கிலி |
| ரௌத்திரம் | – | வெகுளிச்சுவை |

## ல

| | | |
|---|---|---|
| லகான் | – | கடிவாளம் |
| லஞ்சம் | – | கையூட்டு |
| லடாய் | – | குழப்பம் |
| லட்சம் | – | நூறாயிரம் |

லயம் – ஒடுக்கம், இசைவு
லயித்தல் – ஒன்றுதல்
லட்சியம் – குறிக்கோள், நோக்கு
லலிதம் – அழகு, மென்மை

## லா

லாகவம் – திறமை
லாகிரி – வெறி
லாபம் – பெருக்கம்
லாயக்கு (அரபு) – தகுதி
லாயம் – குதிரைப்பந்தி
லாவண்யம் – இலங்கெழில்

## லி

லிகிதம் – ஆவணம், மடல், முடங்கல்
லிகிதர் – எழுத்தர்

## லீ

லீலை – விளையாட்டு

## லு

லுங்கி
சாரம்
(பாலி) – மூட்டுடை

## லூ

லூட்டி – தொல்லை

## லே

| | | |
|---|---|---|
| லேகியம் | – | இளகியம் |
| லேஞ்சி | – | கைக்குட்டை |
| லேசு | – | எளிது, குறைவெடை |

## லோ

| | | |
|---|---|---|
| லோகசஞ்சாரம் | – | உலகுலா |
| லோகப்பிரசித்தம் | – | உலகப்புகழ் |

## வ

| | | |
|---|---|---|
| வக்கணம் | – | குறளை |
| வக்காலத்து | – | ஒப்பாவணம், சார்புப் பேச்சு |
| வக்கிரம் | – | கோணல் |
| வக்கீல் | – | வழக்குரைஞர் |
| வக்கு | – | வழி |
| வகையறா (உருது) | – | வகைகள், முதலிய |
| வங்கிசம், வமிசம் | – | மரபு, கால்வழி |
| வங்கி | – | வைப்பகம் |
| வச்சிரம் | – | உறுதி |
| வசந்தம் | – | இளவேனில், தென்றல், நறுமணம் |
| வசனம் | – | உரைநடை, தொடரியம் |
| வசித்தல் | – | உறைதல், வாழ்தல் |
| வசியம் | – | கவர்ச்சி |
| வசீகரம் | – | கவர்ச்சி |
| வசூல் (உருது) | – | திரட்டு |
| வண்ணம், வர்ணம் | – | நிறம் |

| | | |
|---|---|---|
| வதந்தி | – | சான்றிலாச்செய்தி, ஐயவுரை |
| வதநம் | – | முகம் |
| வதம் | – | அழிப்பு, துன்புறுத்தல் |
| வதுவை | – | திருமணம் |
| வந்தனம் | – | வழிபாடு |
| வந்மம் / வன்மம் | – | தீராப்பகை |
| வநம் / வனம் | – | காடு |
| வயது | – | அகவை |
| வயம் / வசம் | – | வழிப்படுகை |
| வசப்படுத்தல் | – | வழிப்படுத்தல் |
| வயிரம் | – | கூர்மை, மணிக்கல், திண்மை, உறுதி |
| வயோதிகர் | – | முதியோர் |
| வயோதிபம் | – | முதுமை |
| வர்க்கம் | – | மட்டம், நிலை |
| வர்த்தமானம் | – | செய்தி, நிகழ்வு, நடப்பு |
| வர்த்தமானி | – | பதிகை |
| வர்மம் | – | உட்பகை |
| வர்ஷம் | – | மழை |
| வஸ்திரம் | – | ஆடை, துணி |
| வருஷம் / வருடம் | – | ஆண்டு |
| வரதட்சணை | – | மணக்கொடை |
| வரப்பிரசாதம் | – | நற்பேறு, பெரும்பேறு |
| வரம் | – | பேறு |
| வஸ்து | – | பொருள் |

## வா

| | | |
|---|---|---|
| வாக்காளர் | – | தேர்வோர் |

| | | |
|---|---|---|
| வாக்கியம் | – | தொடரியம் |
| வாக்கு | – | வாய்ச்சொல், ஒப்போலை, தேர்வோலை |
| வாக்குநாணயம் | – | சொன்னேர்மை |
| வாக்குவாதம் | – | சொற்பிணக்கு |
| வாகனம் | – | ஊர்தி |
| வாகு | – | தோள் |
| வாசகம் | – | சொல், கூற்று |
| வாசகர் | – | படிப்போர் |
| வாசம் | – | உறைவிடம், நறுமணம், உணவு |
| வாசனை | – | மணம், படிப்பு |
| வாசஸ்தலம் | – | உறைவிடம் |
| வாசித்தல் | – | படித்தல் |
| வாஞ்சை | – | பற்று, விருப்பு |
| வாதம் | – | காற்று, குளிர்ச்சி, துன்பம், கோள்நிறுத்தல், கருத்து நிறுவல் |
| வாதி | – | வழக்காளி, கோள்நிறுவுநர் |
| வாத்தியம் | – | இசைக்கருவி, இயம் |
| வாந்தி | – | கக்கல் |
| வாநரம் | – | குரங்கு |
| வாய் | – | காற்று, வழி |
| வார்த்தை | – | சொல், கூற்று |
| வாரணம் | – | கடல், யானை, சேவல் |
| வாரம் | – | கிழமை, ஏழல் |
| வாலிபம் | – | இளமை |
| வாஸ்தவம் | – | உண்மை |

## வி

| | | |
|---|---|---|
| விக்கிரகம் | – | படிமம், இறையுரு |

| | |
|---|---|
| விக்கிரமம் | – மிகுவலு |
| விக்கினம் | – இடையூறு, தடை, இடர், தீங்கு |
| விகசிதம் | – மலர்ச்சி |
| விகடம் | – பகடி, களிமொழி, நகைச்சுவை |
| விகற்பம் | – வேறுபாடு, மனமுரண் |
| விகாசம் | – மலர்ச்சி |
| விகாரம் | – அருவருப்பு, வேறுபாடு, அழகின்மை |
| விகாரம் / விகாரை | – புத்தகோயில் |
| விகிதம் | – கூறுபாடு |
| விகுதி | – இறுதிநிலை, பின்னொட்டு |
| விச்சை / வித்தை | – கல்வி, அறிவு |
| விசநம் | – கவலை |
| விசமம் | – இடக்கு, குழப்படி, குறும்பு |
| விசமி / விஷமி | – குழப்பி |
| விசயம் / விஜயம் | – வருகை, வெற்றி |
| விசாரணை | – ஆராய்வு |
| விசாரம் | – ஆராய்தல், தேடல், எண்ணக்கவலை |
| விசாரித்தல் | – ஆராய்தல், வினாவுதல் |
| விசாலம் | – அகற்சி, விரிவு |
| விசித்திரம் | – புதுமை, பேரெழில் |
| விசுவாசம் | – பற்றுறுதி, நம்பிக்கை |
| விசேடனம் | – அடைமொழி |
| விசேடம் / விசேசம் | – சிறப்பு |
| விடயம் / விஷயம் | – பொருள், செய்தி |

| | | |
|---|---|---|
| வித்தகம்<br>வித்துவம் | – | சிறப்புத்திறன், புலமை |
| வித்தகன் | – | சிறப்பறிஞன், நுண்திறலர் |
| வித்துவான் | – | புலவன் |
| வித்தியாசம் | – | வேறுபாடு |
| வித்தியாசாலை<br>வித்தியாலயம் | – | கல்விக்கூடம் |
| விதண்டாவாதம் | – | முரணுரை, அழுங்குப்பிடி |
| விதம் | – | வகை |
| விதவை | – | கைம்பெண் |
| விதானம் | – | மேற்கட்டி, வானம் |
| விதி | – | கட்டளை, சட்டம், ஊழ் |
| விந்தை | – | புதுமை |
| விநயம் | – | பணிவு |
| விநாசம் | – | பேரழிவு |
| விநாடி | – | நொடிப்பொழுது, அளபு |
| விநியோகம் | – | வழங்கல் |
| விநோதம் | – | வியப்பு, மருட்கை |
| விபசாரம் | – | பரத்தைமை |
| விபத்து | – | இடையூறு |
| விபரீதம் | – | மாறுபாடு |
| விம்பம் | – | நிழல், ஒளி |
| விமர்சனம் | – | திறனாய்வு |
| விமரிசை | – | பேரெடுப்பு |
| விமானம் | – | வானூர்தி, கருவறை, மேல்மாடம் |
| விமோசனம் | – | நீக்கம் |
| வியாக்கியானம் | – | விளக்கவுரை |
| வியாகரணம் | – | இலக்கணம் |
| வியாகுலம் | – | கவலை |
| வியாசம் | – | கட்டுரை |
| வியாதி | – | நோய், பிணி |
| வியாபாரம் | – | வணிகம், வாணிகம் |
| வியாபித்தல் | – | பரப்புதல், பரவுகை |

வியாபகம் – பரம்பல்
வியூகம் – படைக்கள அமைப்பு
வியோகம் – இறப்பு, நீக்கம்
விரக்தி – மனஇடிவு, மன்முறிவு, மனஉடைவு
விரகதாபம் – பிரிவாற்றாமை
விரதம் – நோன்பு
விருக்ஷம் – மரம்
விருத்தர் – முதியோர்
விருத்தாந்தம் – பெருவிளக்கம், வரலாறு
விருத்தி – வளர்ச்சி
விரோதம் – பகை, செற்றம்
விரோதி – பகையாளி
விலாசம் – முகவரி, அழகு, ஒருவகைக் கூத்து
விவகாரம் – நிகழ்ச்சி, தொடர்பு, நடவடிக்கை
விவசாயம் – உழவு, வெள்ளாண்மை
விவரணம் – விளக்கம்
விவரம் – விளக்கம்
விவேகம் – நுண்ணறிவு, கூரறிவு
விவேகி – நுண்ணறிவர்
விவாகம் – திருமணம், மன்றல்
விவாதம் – கருத்துப்போர், சொற்போர்
விஸ்தரிப்பு – விரிவாக்கம், பெருக்கம்
விஸ்வரூபம் – பெருவடிவம்

## வீ

வீதம் – நூற்றுக்கூறு
வீதி – தெரு, மறுகு

## வெ

வெகுமானம் – அன்பளிப்பு

## வே

வேகம் – விரைவு, விசை

வேடம்
வேஷம் } – புனைவுரு

வேதம் – மறை

வேதனம் – கூலி, வருவாய்

வேதனை – துன்பம்

## வை

வைத்தியம் – மருத்துவம்

வைதிகம் – பழைமைப்பற்று, மறைச்சார்பு

வைபவம் – கொண்டாட்டம்

வைராக்கியம் – உறுதிப்பாடு

## ஜ

ஜகம் – உலகம்

ஜடம் – உயிரிலி, உயிரில்பொருள்

ஜந்து – ஊர்வன

ஜம்பம் (மராட்டி) – பகட்டு

ஜயந்தி
ஜெயந்தி } – பிறந்தநாள்

ஜயம்,
ஜெயம் } – வெற்றி

ஜயகோஷம் – வெற்றி முழக்கம்

ஜரிகை – கோடிகை

ஜலம் – நீர்

ஜன்மம் – பிறப்பு
ஜன்னல் – பலகணி, காலதர்
ஜனனம் – பிறப்பு, தோற்றம்
ஜனம் – மக்கள்

## ஜா

ஜாக்கிரதை – எச்சரிக்கை
ஜாகை – உறைவிடம், தங்கிடம்
ஜாதகம் – சார்புநிலை, பிறப்புக் கணியம்
ஜாதி – இனக்கிளை
ஜாலம் – கவர்ந்திழுக்கை, மாயம்

## ஜீ

ஜீப் – வல்லியங்கூர்தி
ஜீரணம் – செரித்தல்
ஜீவன் – உயிர்
ஜீவனம் – வாழ்க்கை
ஜீவனாம்சம் – பேணுகைப்படி
ஜீவிதம் – வாணாள்
ஜீவியம் – வாழ்க்கை

## ஜு

ஜுரம் – காய்ச்சல், வெப்புநோய்
ஜுவாலை – சுடர், பிழம்பு

## ஜெ

ஜென்மம் – பிறப்பு

## ஜோ

| | |
|---|---|
| ஜோக்கு } சோக்கு } | – பகட்டு, சிறப்பு, நன்று |
| ஜோடி | – இணை |
| ஜோடிப்பு | – புனைவு, ஒப்பனை |

## ஸ்

| | |
|---|---|
| ஸ்நானம் | – குளிப்பு, முழுக்கு |
| ஸ்தாபகர் | – நிறுவுநர் |
| ஸ்தாபனம் | – நிறுவனம் |
| ஸ்தானம் | – இடம் |

## ஸ

| | |
|---|---|
| ஸமஸ்கிருதம் | – சங்கதம், வடமொழி |

## ஷ

| | |
|---|---|
| ஷரத்து | – சட்டக்கூறு |

## ஹ

| | |
|---|---|
| ஹர்த்தால் | – கதவடைப்பு |
| ஹாஸ்யம் | – பகடி, நகைச்சுவை |

○ ○ ○

